ஸ்ரீ முருகன் துணை.

# சிக்கல்

# ஸ்ரீ சிங்காரவேலவர் வெண்பா வந்தாதி.



நூலாசிரியர் : **ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்**

இந்நூல்: திருமலைராயன்பட்டினம்,
புராணிகர், **ப. ஷண்முக முதலியார்** (தற்கால வாசம் திருமருகல்)
அவர்கள் பொருளுதவியால் வெளியிடப்பெற்றது.

 1970 [இதன் விலை: **0-30**.

உ
ஸ்ரீ முருகன் துணை.

சிக்கல்

# ஸ்ரீ சிங்காரவேலவர் வெண்பா வந்தாதி.



நூலாசிரியர்: **ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்**

இந்நூல்: திருமலைராயன்பட்டினம்,
புராணிகர், **ப. ஷண்முக முதலியார்** (தற்கால வாசம் திருமருகல்)
அவர்கள் பொருளுதவியால் வெளியிடப்பெற்றது.
1970

உ
சிவமயம்

## முன்னுரை



பூமண்டலத்திற் பிறந்த மக்களுக்கு வினையால் வருந் தூல தேகத்தில் வாத பித்த சிலேட்மம் என்னும் முத்தோடமிருப்பது போல் லிங்கதேகம் சிருட்டி முதல் பிரளயம் வரையிருப்பதும் பந்தமோட்ச காரணமானதும் இருபது தத்துவங்களோடு கூடியதுமான இந்தச் சூட்சும தேகத்தில் மலம்விட்சேபம் ஆவரணம் என்னும் முத்தோடமுண்டு அதற்குப் பரமேஸ்வரனுல் கொடுக்கப் பட்ட இருக்காதி வேதங்களில் கர்மம் பக்திஞானமெனு முக்காண்டங்களால் சொன்னபடி முயற்சிப்பவர்க்கு மல முதலான தோட நிவர்த்தி வாயிலாய் சுபாவசித்தமான மோட்சப்பேறு பெறுவதாகும். அன்றியும் கலியில் கர்மத்தை அனுஷ்டித்துப் பலனைப் பெறுவதும் அரிதா கின்றது. ஆனுல் எல்லோரும் மனப்பூர்வமாக பகவா னுடைய நாமங்களைச் சொல்லித் துதிப்பவர்க்கு எல்லா நலனும் உண்டாகுமென்பது சுருதி யுக்தியனுபவமாகும். மேலும் இறைவனுடைய நாமங்களும் உருவங்களும் பலவிதமாயிருப்பதால் யார் யார் எந்தெந்தவிதம் நினைக் கின்றனரோ, அந்தந்தவிதமாய்ப் பலனும் பலவிதமாக காணப்படுவதாம். வழிபாடு செய்வோர்க்கு நினைவின்படி கலியுகவரதனென்னும் பேரோடும் உடனே பலன்தருந்

தெய்வம் சண்முகப்பெருமான் என்பதை யாவரும் ஒப்புக் கொள்வர் ஏனெனில் இம்மையில் துக்கம் நீக்கி யின்பத் தையும் மறுமையில் பேரின்பத்தையும் பெற்ற அகத்தியர் முதல் அருணகிரிநாதர் நக்கீரர் பாம்பன் சுவாமிகள் தண்டபாணி சுவாமிகள் வரையிலுள்ள பல பெரியோர் களை உலகிற் காணலாம். அன்றியும் நம்போன்றவர்களுக் கும் அருள்புரிவான் என்பதில் உலகத்தில் பலபேர்களைப் பார்க்கலாம்.

இது நிற்க அடியேன் பல வருடங்களுக்குமுன் கந்தபுராண வசனத்தை ஆறுமுகப்பெருமானை மனதில் நினைத்துக்கொண்டு ஓய்வு நேரங்களில் படித்து முடித்தேன். அக்கந்தபெருமான் திருவருளால் வெண்பா வந்தாதி, அயோத்திமாலையாய இரண்டு நூல்களை இரு நூறு பாடல்களாகப் பாடமுடிந்தது. அதைத் திருவருட் செயலெனவெண்ணி யான் திருவருள் வெண்பா வந்தாதி திருவருள் அயோத்திமாலை யெனப் பெயரிட் டிருந்தேன் மேலும் மருகன்மாலை மருகல் அந்தாதி எனும் இரண்டும் பாடிய பின்னரும் ஸ்ரீராமர் பிள்ளைத் தமிழ்பாடவேண்டுமென விருப்பம் உண்டாயது பாடும் புலமையின்றியவெனக்கு ஒரு நினைவுண்டாயது. அதென்னவெனில் சிக்கற் சிங்கார வேலவன் றிருவடி களைப் பாடினுல் அருள்புரிவானென்னும் ஆசையால் "வெண்பாவந்தாதி பாடத்தொடங்கி முடியுமுன்னரே பிள்ளைத் தமிழ் பாடமுடியுமென்ற துணிவு தானேயுண் டாயது. அவ்விதமே அப்பெருமான் அருளால் அவருடைய மாமனுக்குப் பிள்ளைத் தமிழ் சில நாட்களுக் குள் பாடிமுடித்தேன். இப்படி யனுக்கிரகம் செய்த

வெண்பாவந்தாதி நூற்பயனேடு நூற்றிரண்டு பாடலாகும். இந்நூலை மெய்யன்பர்கள் அச்சியற்றிப் பல அன்பர்களும் பாராயணம் செய்யக் கொடுத்தால் நலமாயிருக்கும் என்னும் விருப்பத்திற் கிணங்கி வெளியிடுகின்றேன். இப்பாடலைச் சிங்கார வேலவரிடத்தில் மெய்யன்போடுப் படிப்பவர்களுக்கு இம்மையில் இன்பமும் மறுமையில் மோட்ச வீடும் சித்திக்கத் திருவருள் புரியும்படி அருட்கடலாகிய சிவகுமரன் திருவடிகளைப் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்

**பிரஹ்மானந்தம்,**

வேணும் சற்குருநாதன் துணை.



சிதம்பரம், மௌன சுவாமிகள் மடம்
**சபாபதி சுவாமிகள்**
இயற்றியது.



**வெண்பா**

பண்பாருஞ் சிக்கற் பதிமருவு செவ்வேட்கு
வெண்பாவந் தாதி விளம்பினுன் — நண்பார்
மிகுபிரமா னந்தமா வெள்ளத் தழுந்தும்
தகுபிரமா னந்தனே தான்.

---

காரைக்குடி — கோவிலூர் மடம்
**மகா. சோமசுந்தர ஐயா அவர்கள்**
இயற்றிய சாத்துக்கவி.



**அறுசீர்விருத்தம்**

பார்மேவு சோணுட்டிற் பொன்னிநதி நீர்வளஞ்சேர் பழனஞ் சூழ்ந்த
சீர்மேவு சிக்கன்நகர்ச் சிங்கார வேலவன்மேற் றிருவந் தாதி
பேர்மேவு வெண்பாவாற் கற்றவர்கள் மகிழ்ச்சியுறப் பெரிது சொற்ருன்
ஏர்மேவு சாதுபிர மானந்த சாமியெனு மினியன் மாதோ.

---

நாகை — வெளிப்பாளையம்
செயலாளர் சைவசித்தாந்த சபை
**ப. வீரப்ப பிள்ளை அவர்கள்**
இயற்றியது.



**வெண்பா**

கந்தாதி யைந்துங் கழல்பிரமா னந்தன்
அந்தாதி வெண்பாநன் காக்கினுன் — சிந்தாத
சீரார் திருசிக்கல் சிங்கார வேலவன்றன்
ஏரார் திருவடிகட் கே.

---

உ

ஓம் தத் சத் பரப்பிரஹ்மணே நம:



# சிக்கல் சிங்கார வேலவர்

## வெண்பா வந்தாதி.

### காப்பு

சீராரும் பொன்னடிகள் சிந்திப்பார்க் கெந்நாளும்
பாராருஞ் செல்வம் பலநல்கி—நேராரும்
துன்பந் துடைத்தருளுந் தும்பிமுகா வேலவனை
அன்பினுற் பாட வருள்.

### நூல்.

திருமால் மருகன் சிவகுமரன் தேவர்
பெருமான் அடியவர்க்குப் பேறு—தருமொருவன்
சிக்கல் திருநகரான் சிங்கார வேலவனைப்
பொக்கமற நெஞ்சேநீ போற்று (1)

போற்றுவார்க் கிம்மைப் பொருணல்கி யேழ்பிறப்பை
மாற்றிநீ மெய்ப்பதத்தை வந்தருளிக்—கூற்றொழிப்பாய்
சிங்கார வேலவனே சிக்கற் பெருநகராய்
மங்காத செல்வந்தா வந்து (2)

வந்தருளுஞ் சிக்கல் வடிவேன் முருகையா
சிந்தையிலே மெய்யுணர்வாற் செற்றிருளை—முந்தைவினை
தீர்த்துப் பிறப்பறுத்துத் தீதற்ற மெய்ப்பதத்திற்
சேர்த்துன் னருள்பொழியச் செய் (3)

செய்வர் உனதுபணி தேவரும் மூவரும் போய்
உய்வர் உனதடிகள் உற்றவரே—ஐவர்
செயல்மாற்றி மெய்யுணர்ந்தோர் சிக்கலுறை பெம்மான்
மயல்மாற்றி நிற்பார் மனத்து (4)

மனத்தில் உகந்துன்னை வாழ்த்தறியா நாயேன்
சினத்தினுற் றீங்குகளே செய்தேன்—உனத்தகுமா
சிக்கற் பெருநகரோய் தீங்ககற்றி நன்மைதனைத்
தக்கவனீ செய்யெனக்குத் தாய் (5)

தாயிற் சிறந்த தயாபரனே தாண்மலரை
நாயிற் கடையேற்கு நல்குவையோ--நோயிற்
புலன்கொடிதே சிக்கலுறை போர்வேலா தீனன்
நலன்கருதி மெய்யுணர்வை நல்கு (6)

நல்கத் திருவருளை நாதன் அருணகிரி
மல்கத் திருப்புகழை வாழ்த்தினுன்—ஒல்கமனம்
பாடநினைத் தேன்சிக்கற் பான்மருவும் வேலவனே
கூடமனம் வைத்திலையென் கூறு (7)

கூருக வேல்விடுத்துக் குன்றெறிந்த வாறுபோல்
வேருக வைங்கோசம் மெய்யுணர்வால்—நீருகச்
சிக்கற் குமரா! திருவருளால் வந்தெனக்கு
முக்குறும்பு மாற்றியருள் முன் (8)

முன்னம் பிறந்திறந்து மொத்துண்ட நெஞ்சேநீ
இன்னம் பிறக்க விசைந்தனையே—செந்நெல்
கவரிவீ சுஞ்சிக்கற் கண்ணுதலோர் பாகக்
கவுரிமகன் ருமரைத்தாள் காண் (9)

காண்புலன்கள் ஐந்துங் கருத்தும் அகத்தடக்கும்
மாண்புமிகு மேலோர் மனத்தவனே — சேண்புகழும்
சிக்கல் வடிவேலா சீர்ஞான முத்தடையும்
ஒக்க வொழிப்பாய் உகந்து (10)

உகந்தே குறத்திபதம் உன்கை வருடல்
செகந்தான் புலன்மயங்கல் செப்பும்—சுகந்தருவ
தென்கருத்திற் றேன்ற வெழிற்சிக்கல் வேலவனே !
வுன்கழலோ வைம்புலனோ வோது (11)

ஓதுமறை யத்தனையும் ஒன்ருகுந் தெய்வமென
வாதுசெயப் பல்சமயம் வைத்ததேன்—போதிற்றேன்
வண்டுண்ணுஞ் சிக்கல் வளநகராய்! வந்தெனக்குப்
பண்டுமறைச் சீர்மை பகர் (12)

பகர்மறைகள் பற்ருெழிக்கப் பல்கா லுரைத்தும்
சுகர்முதலோர் போயுரைத்தும் தோன்ருப்—புகர்மனத்தேன்
மூவாசை முற்றும் முளைக்காமற் சிக்கலுரை
தேவா எனக்கருள்வ தென்று (13)

என்றும் நினைத்துருகி யின்பக் கடலாடி
நன்றுணரு மன்பருக்கு நல்லவனே—சென்றடையும்
அன்னவயற் சிக்கல் அறுமுகவா வுன்கழலே
என்னுயிரைக் காக்கும் இடம் (14)

இடமுனக்குச் சிக்கல் இறையவனே யன்போ
குடமுனிவன் நெஞ்சோ குறத்தி—தடமுலையோ
ஆறுபடைவீடோ அருளிடமோ கங்கையோ
மாறுபடா மன்ருே வழுத்து (15)

வழுத்தும் அடியவர்தம் வல்வினையும் வேதன்
எழுத்தும் அழிக்கும் இறைவா—செழித்திடவே
காவேரி தன்றிரையாங் கையாற் பதம்வருடும்
தேவேயுன் சிக்கலுறும் சீர் (16)

சீராருஞ் சிக்கற் சிவகுமரா! தண்கடம்பத்
தாரா! வடியேற்குன் ருளளித்துப்—பேராரும்
மெய்ஞ்ஞான வேழ்பூமி மேவித் தனித்திருக்க
அஞ்ஞான பூமி யகற்று (17)

அகற்றி யகக்கிரந்தி யாகமுதற் பொய்யென்
றகற்றிமன வாதனைசெய் அல்லல்—அகற்றியெற்குச்
சிக்கற் சிவைபாலா செந்திற் பெருமானே!
ஒக்கதுயர் மாய்த்திடுவாய் ஓர்ந்து (18)

ஓர்ந்துணரா தேமறைகள் ஓலமிட்டு மோனமுறச்
சேர்ந்துசம யங்களுனைத் தெய்வமெனத்—தேர்ந்துரைத்தல்
கண்ணில்லார் யானையெனக் கைதடவல் சிக்கலுறை
அண்ணலே யொக்கும் அளவு (19)

அளவுபடா வுன்னுருவை யன்னைபிதா சேயாய்
பிளவுபடாப் பேரன்பர் பெற்ருர்—உளவறியேன்
செங்கண்மால் பக்கமுறை சிக்கலுறை செல்வேளே
இங்கெனக்கிவ் வுண்மையுரை யின்று (20)

இன்றுவரை யேழ்பிறப்பில் ஏங்கித் தவிப்பேனைக்
குன்றிலுறை சிக்கற் குமரேசா—பொன்ருத
பத்தி லொருவனீ பாரென்ற வாப்தன்போற்
சித்துருவை யானறியச் செப்பு (21)

செப்பும் மொழியனைத்துஞ் சிக்கலுறை சேவகனே
செப்பும் உனையென்றால் தேர்பொருள்பேர்—செப்புதற்கு
வேறேது தொல்லுலகில் வேதப் பொருள்வேறு
பேறேது நீயெனக்குப் பேசு (22)

பேசரிய முத்திதனிற் பேதமுறும் முப்பொருளும்
ஆசகலச் சத்தென் றறைவோர்க்குப்—பாசமரு
ஒவ்வா மறைப்பொருளை யோர்ந்தார்க்குச் சிக்கலுறை
செவ்வேளே உண்டோ சிறப்பு (23)

சிறப்புப் பலபெற்றுஞ் சிக்கலுறை பெம்மான்
பிறப்பருமை யோராதே பித்தர்—இறப்பிறப்பாற்
றுய்வயிற்றி லேபிறந்து தான்புழுப்போற் றீநகரகிற்
போய்விழுவார் என்றே புகல் (24)

புகலாகுஞ் சிக்கற் புரவலனே! என்றும்
இகலான வைம்புலன்செய் இன்னல்—அகலாதோ
மான்கரிமீன் விட்டிலுடன் வண்டுபோற் றொன்றுமல்
நான்கடந்து வாழ நவில் (25)

நவிலும் மறையனைத்தும் நங்கையர்மேன் மோகம்
புவியில் விடமார்க்கம் புல்லேன்—செவியுனக்குக்
கேட்குமோ பன்னிரண்டும் கேளாதோ வள்ளிபதம்
வேட்கையுற்ற சிக்கலுளாய் வீழ்ந்து (26)

வீழ்ந்தொழியச் சூரன்மேல் விட்டநெடும் வேலிருக்க
ஆழ்ந்தறியாக் காம அறுபகைவர்—சூழ்ந்திட நீ
பார்த்திருந்தால் சிக்கற் பரிவேலா! நாயேனைக்
காத்திடுவார் உண்டோ கழறு (27)

கழலடைந்தேன் றஞ்சமெனக் காத்தருளா யாகில்
அழலடைந்த தூசாவேன் ஐய!—பழனிமலை
எந்தாய்! கதிர்காமா! ஏரகத்தாய்! சிக்கலுறை
கந்தா! நீ யென்றன் கதி (28)

கதியிலை யென்றுன்னைக் கண்டடைந்தேன் சிக்கற்
பதியிலமர் வேலவனே! பாரில்—விதியெனவே
விட்டொழியா தென்வினையை வேருக்கி யேழ்பிறப்பின்
கட்டொழித்து நாயேனைக் கா (29)

காவலாய் மாமுகனேன் கன்னன் மொழிவள்ளிக்
காவலாய் வேங்கைமரம் ஆனதேன்—கூவநீ
செட்டி யெனவளையல் சென்றுவிற்ற தேன்சிக்கற்
கட்டழகா மெய்யெனக்குக் காட்டு (30)

காட்டெருமை மேய்க்கின்ற காளையாய் நாவலின்மேல்
வேட்டபழம் ஔவைக்கு மெய்பொருளாம்—பாட்டிசைக்கத்
தந்தாய் தணிகைமலைச் சண்முகா! சிக்கலுறை
எந்தாய்! எனக்கிரங்காய் ஏன் (31)

ஏனென்றென் சற்குருவாய் ஏழ்பிறப்பின் மோகமறத்
தானென்ற நாலேழுந் தள்ளியவா—நானென்றும்
சச்சிதா னந்தமெனச் சாற்றியவா சிக்கலுறை
பச்சைமயில் வேலா பரிந்து (32)

பரிந்தறுவர் ஊட்டமுலைப் பாலுண்ட சிக்கல்
அருந்தவனே யாறுருவாய் அம்மை—தெரிந்தெடுக்க
ஒருருவாய் ஆறுமுகம் உற்ற சரவணனே
நேருருவம் காட்ட நினை (33)

நினைப்போர்க்கு முன்வந்து நீகாத்தல் கண்டும்
தினைப்போதுன் சேவடியைச் சிந்தை—நினைப்பதற்கே
இல்லை வினைப்பயனை யென்செய்வேன் சிக்கலுறை
வல்லவா தந்திரஞ்சொல் வா (34)

வாவென் றழைக்க மயில்மீதில் வேலுடன்யான்
தேவென் றருள்சிக்கற் செவ்வேளே—நாவென்றும்
உன்புகழே பாட வுணர்வளித்து நாயேற்கு
வன்பவத்தை யுன்னருளால் மாற்று (35)

மாற்றித் தொழிலனைத்தும் மங்காப் பெருவெளியிற்
கூற்றறியா வானந்தங் கூடிநிதம்—ஊற்றெடுத்துச்
சிந்தையுளே பொங்கத் திருச்சிக்கல் நாயகனே
எந்தநாள் வாய்க்கும் இசை (36)

இசையறியேன் உன்புகழை யென்னுவாற் பாடத்
திசையறியேன் உன்கழலைத் தேட—வசையறியேன்
வாழ்வறிந்து வாழ்விப்பாய் வான்சிக்கல் வேலவனே
ஊழ்வலியை யோர்ந்திலனே யுற்று (37)

உற்றார் எனக்கொருவர் உண்டோ வுனைப்போலப்
பெற்றாரும் உண்டோவிப் பேருலகில்—மற்றாரும்
உண்டோநீ யன்றி யுயர்சிக்கல் வேலவனே
தண்டோர்கைப் பெம்மானே சாற்று (38)

சாற்றும் மறைமுடிவும் தன்மப் பொருண்முடிவும்
போற்றும் பொருண்முடிவும் புண்ணியத்தால்—ஆற்றுவதும்
சற்குருவாற் சாதனத்தாற் சார்ந்திருக்கு மெய்ப்பதமும்
பொற்சிக்கல் வேலவன்றாட் போது (39

போதன் முதற்றம்பப் பூச்சிவரை யுள்ளசைத்துப்
பேதப் படுங்கன்மப் பேறளிப்போய்—பேதமற
வஞ்சப் புலமொழித்து வான்சிக்கல் வேலவனே
தஞ்சமடைந் தேனளிப்பாய் தாள் (40)

தாள் சேர்ந்தார்க் கெந்நாளுந் தாழ்வில்லா நன்னாளே
கோள்சேர்ந்த தீதில்லை கோன்சிக்கல்—வேள்சேர்ந்த
சண்முகமும் வேலுஞ் சதங்கையொலிச் சேவடியும்
உண்முகமாய் நோக்குவார்க் குண்டு (41)

உண்டுடுத்து வாழ்வார் உடல்வரையும் ஊனுயிரைக்
கண்டறியார் வாழ்வுவெறுங் காடாகும்—தொண்டனாய்
உன்னடியார் தாள்சேர்த் துணர்வளித்து வாழ்விப்பாய்
என்னமுதாம் சிக்கல் இறை (42)

இறைவா பிறந்தார் இறப்பவரே யாகும்
நிறைவா யழியாமல் நீங்கா—உறைவிடமாய்ச்
சிக்கற் பெருமான்நின் சேவடியே யென்றறிந்து
புக்கவெனைக் காத்தருளிப் போது (43)

போதிலயன் ஓமென் பொருளுரையா தேநிற்பக்
காதிணிங்கிக் குட்டிவைத்தாய் காவற்றனில்—ஆதிசிவன்
ஓமெழுத்தைக் கேட்டுரைத்தாய் ஒண்சிக்கல் வேலவனே
தாமெனக்குச் சொல்வாய் தனித்து (44)

தனித்திருந்து மூவாசை தள்ளிமனத் துள்ளே
அனித்தம் உலகமென வாய்ந்தார்க் – கினித்திருக்கும்
மங்காத சிக்கல் வளநகரோய் நாயேற்கும்
இங்காசை மூன்றொழிப்ப தென்று (45)

என்றும் புலன்வழியில் ஏக்குற்ற நெஞ்சேநீ
ஒன்றுபட் டோர்ந்துணரா தோடுகின்றாய்—குன்றுதொறும்
ஆடுவான் சிக்கல் அருமருந்தாய் அன்பினாற்
றேடுவார்க் குள்ளிருக்குந் தேன் (46)

தேன்கலந்த தேன்போலும் சேர்ந்தபால் பால்போலும்
தான்கலந் தொன்றாந் தனையறிந்தால்—ஊன்கலந்தான்
உள்ளென் உயிர்கலந்தான் ஒன்றானான் சிக்கலுறை
வள்ளல் பிணிக்கு மருந்து (47)

மருந்தாய்ப் பிறப்பொழிப்பாய் மாதவர்க்குச் செய்யும்
அருந்தவமாய் அப்பயனாய் ஐய—இருந்தாய்
பழமுதிர் சோலைப் பதியவனே சிக்கல்
அழகவனே வந்தென்னை யாள் (48)

ஆளாக்கி யன்பருக்கே யாள்சிக்கல் வேலவனே
வேளாக்கும் ஐம்புலனும் வெவ்வழலுக்—காளாக்கிப்
பட்டதுயர் போதாதோ பன்னிருகண் ணோக்காயோ
விட்டவர்க்கே யாசையற வீடு (49)

வீட்டிற் புகுமவர்கள் மெய்த்தவங்கள் செய்வதுவும்
ஓட்டில் இரந்துண்டும் ஊனொழித்தும்—காட்டிற்
றனியிருந்தும் நீர்தோய்ந்தும் தாம் வருந்தார் சிக்கல்
நனிவேலன் றாள்சேர்ந்தார் நன்கு (50)

குற்றம் பொறுப்பாய் குணமென்றே என்செயலைப்
பெற்றவள்போற் பேணுகின்ற பேராளா—கற்றுணர்ந்தோர்
தன்னுருவாஞ் சிக்கற் றனிவேலா மற்றவர்க்கோ
அன்னியம்நீ யென்றே யருள் (51)

அருளுடைமை மெய்நடுக்கம் ஆனந்தம் ஓதாப்
பொருளுணர்தல் நாக்குளறல் பொன்ருத்—தெருளுதல்
வாக்குப் பலித்திடுதல் மற்றுமுண்டாம் சிக்கலுறை
நீக்கமிலா வேலனருள் நேர்ந்து (52)

நேர்ந்தடியார் துன்பம் நெருப்பிற் சுடச்சுடப்பொன்
சேர்ந்தொளிர்தல் போலருளாற் றெய்வநிலை-யோர்ந்திடுவார்
ஐயா திருச்சிக்கல் ஆறுமுக வேலவனே
மெய்யாகு மென்றேற விளம்பு (53)

விளம்பறியா வாக்குமனம் வெட்கிவிட நாயேன்
உளம்வாக்கால் ஓர்ந்துரைத்தல் உண்டோ—வளமுடைய
சிக்கற் பெருநகரோய் திக்கற்றேன் ஓர்ந்துரைக்கப்
பக்கம்வந் துண்மையருள் பார்த்து (54)

பார்த்தனையோ வுன்னருளால் பாவமற முத்தாபம்
தீர்த்தனையோ தேவியிடம் வேல்வாங்கி—வேர்த்தனையோ
கூவினேன் சிக்கலுறை கோவே எனக்களிப்பாய்
நாவினுற் பாடும் நலம் (55)

நலமும் ஒளியுருவம் ஞானத்தால் வாழ்வும்
குலமும் மகன்மனையும் குன்ருப்—பலமும்
திருவும் பலவும் தினம்பரவு வார்க்குத்
தருஞ்சிக்கல் வேலன் சரண் (56)

சரணடைந்தால் எல்லாம் தருஞ்சிக்கல் வேலா
அரணடையாச் சித்தம்போய் ஆடி—முரணடைந்து
நாடும் பலகோடு நாட்டமெனில் என்செய்வேன்
ஓடுமனம் மாற்ற வுரை (57)

உரையாடு நாளெனக்கும் உன்னோடும் உண்டோ
திரையாடிப் பொன்கொழிக்கும் சிக்கற்—பரைபாலா
காண நினைத்தவெனைக் காத்தருளாய் இக்கலியில்
நாணமறப் போகும்வீண் நாள் (58)

நாட்பல நோற்றிடினும் நல்வாழ்வு பெற்றிடினும்
கோட்பல நீங்கக் குவலயத்தோர்—ஆட்படினும்
எம்பெருமான் சிக்கல் எழில்வேலன் ருள்போற்ருர்
இம்பரிலே நீசரென வெண் (59)

எண்ணாத வெண்ணமெலாம் எண்ணி யிளைத்தேங்கிப்
புண்ணான புன்னெஞ்சே போதுமினிக்—கண்ணான
சிக்கற் சிவகுமரன் சேவடியைச் சிந்திப்பாய்
பக்கமுரு தெப்பகையும் பார் (60)

பார்க்கடலுஞ் சுற்றிப் பல்திசையுஞ் சென்ருலுஞ்
சீர்படவே நன்முயற்சி செய்தாலும்—நேர்படவே
நல்வினையே யெப்பயனும் நல்குமெனச் சிக்கலுறை
செல்வனடி போற்றுதினம் (61)

தினம்போற்றும் அன்பர் திருவுடையார் நெஞ்சே
மனம்வருந்தார் நோயற்று வாழ்வார்—முனமுற்ற
தீயவினை சேரார் திருச்சிக்கல் வேலவன்ருள்
ஆயமனம் வைப்பார் அகத்து (62)

அகத்துமட்டே வாழ்வு அணியிழையார் வாசன்
முகத்துமட்டே மைந்தரனன் மூட்ட—விகத்துமட்டே
சேரவருந் தீவினைகள் தீர்த்தருளாற் சிக்கலுறை
பேரரசே முத்திதரும் பேறு (63)

பேறு பதினாறும் பெற்றுலகில் வாழ்ந்தவரும்
வேறுபட மாய்ந்தார் விதிவயத்தாற்—கூறுபடா
மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவுதற்குச் சிக்கலுறை
கைஞ்ஞான வேலன் கழல் (64)

வேலன் கழலன்றி வெந்துயரம் தீர்ப்பதுண்டோ
காலன் றுயரறுமோ கட்புலன்றான்—சீலமதோ
சத்தியுண் டோசிக்கற் சண்முகன்றாள் சேர்நெஞ்சே
முத்திதரும் முன்னோர் மொழி (65)

மொழியுமுனே வேதமெனில் மோனமுற்றோர் நங்கை
மொழியுந்தன் நாதனைப்போல் முன்னூன்-மொழியனைத்தும்
அல்லையீ தல்லையென் றோர்சிக்கல் வேலவனே
சொல்லுமறை மோனமுறச் சோர்ந்து (66,

சோர்ந்ததென் னெஞ்சமும் சோர்ந்த தயன்கையும்
சோர்ந்ததென் றுய்முகமும் தொல்புவியும்—சோர்ந்ததென்சொற்
கேட்டுமிரங் காஞே கிளர்சிக்கல் வேலவன்றான்
கூட்டும் பிறப்பொழிக்குங் கோன் (67)

கோனுகி வானோர்க்குக் குற்றமிலா யோகியர்க்குத்
தேனுகி யென்றுமென் சிந்தையுளே—நானுகி
எவ்வுயிரும் ஆகும் எழிற்சிக்கல் வேலவனே
தவ்வுமனம் மாற்றுவையோ தான் (68)

தானென்றும் ஒன்ருகும் தானல்லா வோரேழும்
நானென்றும் வேறென்றும் நாலேழாம்—தானல்லா
வையேழும் வேரும்பொய் யாஞ்சிக்கல் வேலவனே
மெய்யேநான் ஞென்ருந்தான் மெய் (69)

மெய்ஞ்ஞான சத்தின்பம் மேற்சிக்கல் வேலவனே
பொய்ந்நாம ரூபம் புவியனைத்தும்—ஐவகையாய்ச்
சேர்ந்து பிரியாமற் செய்வதறி யாமாந்தர்
கூர்ந்தறிய மாட்டார் குணம் (70)

குணங்குறிக ளில்லாக் குகனேமாஞ் சோலை
மணங்கமழுஞ் சிக்கலுறை வள்ளால்—பிணங்கவரப்
பாருற்ற வான்கழுகுப் பான்மையற நயேனை
சீருற்ற மெய்ப்பதத்திற் சேர் (71)

சேர்த்துன் றிருவடியிற் சிந்தைமிகத் தித்திக்க
ஆர்த்துவரு மின்புக் களவுண்டோ—பேர்த்துமனந்
தாவாமல் நிற்பதற்குத் தந்திரந்தான் சிக்கலுறை
தேவா வுனக்கரிதோ செப்பு (72)

செப்பரிய நான்மறையும் தேவர் முதன்மூவர்
ஒப்புரையாச் சிக்கல் உயர்நகரோய்—துப்புடையோய்
நொந்தயரா முன்னருளால் நோக்கிமுகம் நாயேனை
வந்தணுகா முன்றுயரை மாற்று (73)

மாற்றியொரு மூன்றவத்தை மாருத் துரியமதில்
ஏற்றிவைத் தின்பமழை யென்னுள்ளே—ஊற்றெடுத்துப்
பாயவருள் சிக்கற் பரனே! சிவகுமரா!
தாயவனீ காக்கத் தகும் (74)

தகுந்தெய்வம் நீயன்றித் தாரணியில் அன்பர்
புகுந்தெய்வங் கோயிலுண்டோ போற்ற—உகந்தருளும்
அண்ணலே! சிக்கல் அருட்கடலே! உன்கழலை
எண்ண வருள்புரிவாய் இங்கு (75)

இங்கருள வல்லாய் எழிற்சிக்கல் வேலவனே
பொங்குநோய் தீர்த்துப் புகலிடமாய்—அங்கைநீ
அஞ்சலெனக் காட்டி யறுமுகங்கள் காட்டிவந்தேன்
துஞ்சலறக் காக்குந் துணை (76)

துணையாய் எழுபிறப்பின் றுன்பக் கடற்குப்
புணையாய் அழியாத பூம—அணையாய்
இருப்பதுன்ருள் சிக்கலுறை யெம்பெருமா னுன்றன்
திருப்பதத்தில் என்மனத்தைச் சேர் (77)

சேர்வ திருவினையாம் செய்வ திருவினையாம்
சோர்வ திருவினையாற் ருெல்லுலகில்—ஓர்வதிலா
மாந்தரழிந் தார்மனமே வான்சிக்கல் வேலவன்ருள்
போந்தடைந்தார் கன்மவினை போம் (78)

போமோ புலன்றுயரப் புன்பிறப்பு நின்னருளால்
ஆமோ வழியாத வானந்தம் ஈமோதும்
பூம்பொழில்சூழ் சிக்கற் புள்ளிமயில் வேலா நீ
ஓம்பொருளைச் சோகமென வோது (79)

ஓதலற வென்மனம்போய் உண்முகமாய் நின்னருளாற்
போதலற நின்று புலன்முழுதுங்—காதலற
மெய்யா வருட்சிக்கல் வேலா வெனக்குநலம்
செய்யாயேல் உண்டோ சிறப்பு (80)

சிறப்புனக்கு வேண்டுவையேற் சென்றலைந்த நெஞ்சே
பிறப்பகற்றுஞ் சிக்கற் பிரான்றன்—திறம்போற்றித்
தூங்காமற் றூங்கிச் சுகித்திருக்கும் மெய்ப்பதத்தில்
நீங்காமல் நிற்க நினை (81)

நினைவே யுலகமென நின்றறியாய் நெஞ்சே
உனைவேருய் எண்ணுவையேல் உய்யாய்—கனவேபோல்
ஒன்ருகும் உண்மை யுயர்சிக்கல் வேலவன்ருள்
சென்ருய வோயும் செயல் (82)

செயல்மாற்றி முக்கரணஞ் செய்தவத்தாற் சூரன்
அயல்மாற்றி யண்டமெலாம் ஆண்டும்—மயல்மாற்ருன்
பெண்மயலாற் கெட்டான் பெருஞ்சிக்கல் வேலவவென்
கண்மயலைத் தீர்த்தருள்வை காண் (83)

காண்பதெலாம் பொய்யென்ருற் காண்பதுமற் றேதுலகில்
மாண்பதுவே யானல் மயலேது—சேண்பலவாய்
ஆனவிதம் போலாம் அருட்சிக்கல் வேலவனே
தானதுவே யாகும் தனித்து (84)

தனித்துப் பழனியிற்போய்த் தண்டேந்தி யாவும்
அனித்தம் எனவாண்டி யாணுய்—நனித்தெய்வ
ஆனைவள்ளி வந்தணைய ஆள்சிக்கல் வேலவனே
போனவிதம் என்ன பொருள் (85)

பொருளற்ற நாயேனும் பூவுலகில் வாழ்தல்
அருளூற்ற வுன்பரமே யாகும்—தெருளூற்று
நெஞ்சதனிற் போய்ப்பிறவா நேர்மையருள் சிக்கலவா
அஞ்சலெனக் காத்தல் அழகு (86)

அழகே பெயராய் அமைந்திலங்கும் சிக்கற்
குழகாவுன் மெய்யடியார் கூட்டம்—பழகாத
தீயேனை வள்ளிதெய் வானையுடன் சீர்மயில்மேல்
நாயேனை வந்தருளால் நாடு (87)

நாடுமவர் சோகமெனல் நானதுவே யென்றறிவர்
தேடுமவர்க் கன்றித் தெரியாபோல்—பாடுமவர்
உள்ளறிவர் சிக்கல் உயர்வேலன் சேவடிகள்
தெள்ளியறி யார்வீணர் தீர் (88)

தீர்க்கவினை யாவர்க்கும் தேவாரப் பண்பாடி
மூர்க்கசம ணர்க்கழுவில் முன்னேற்றி—மார்க்கமுரை
செய்யுந் திருச்சிக்கற் செவ்வேளே நாயேற்கும்
உய்யும் வழிகாட்டாய் ஓர்ந்து (89)

ஓர்ந்துன் பெருமை யுரைத்துய்யா மானுடரைச்
சேர்ந்த பெரும்பாவந் தீர்த்துய்யத்—தேர்ந்துமறை
போற்றுந் திருச்சிக்கற் புண்ணியனே வந்தடைந்தேன்
மாற்றியெனை யாள்வாய் மதித்து (90)

மதித்துமையாள் ஈசன் முடிமேன் மகிழக்
குதித்தாடுஞ் சிக்கற் குமரா—துதித்துன்னை
மூவர் முதலெவரும் முன்வினைகள் தீர்ப்பதற்கே
சேவற் கொடியாய் தெரி (91)

தெரிவரிய நீயருவோ சேயுருவோ அன்போ
விரிவரிய பல்சமய வேந்தோ—கரியதுவோ
என்னார் உயிரோ எழிற்சிக்கல் வேலவனே
சொன்னால் உனக்கென்ன சோர்வு (92)

சோர்வுற்று மெய்மறந்து சொல்லடங்கி யிவ்வுலக
ஆர்வற்று வாய்குளறும் அன்றழையேன்—சார்வுற்றுன்
அன்பகலாச் சிக்கல் அறுமுகவா என்மனத்தை
உன்பதத்தில் வைக்க உணர்த்து (93)

உணர்பகழிக் கூத்தன் உரைபிள்ளைப் பாக்கேட்
டிணர்மலர்த்தாட் சிக்கல் இறைவா—புணர்முலையாள்
வள்ளிதெய் வானையுடன் வந்துமகிழ்ந் தாயென்பா
எள்ளிவிடா தேகேட்பாய் இன்று (94)

இன்றிக் கலியுகத்தில் எக்கதியும் இல்லாமற்
சென்றடைந்தேன் உன்னுடைய சேவடிக்கீழ்—ஒன்றருளாய்
என்னிலென் செய்வேன் எழிற்சிக்கல் நாயகனே
உன்னருட்கும் உண்டோ வுயர்ப்பு (95)

உயர்முருகாற் றுப்படையாம் ஒண்டமிழைக் கீரன்
றுயரறப் பாடுமதைத் தொண்டர்—அயர்வறவே
பாடுநர்க்குச் சிக்கற் பரமன் பகையொழித்து
வாடினர்க்குக் காட்டும் வழி (96)

வழிகாட்டி யன்பருக்கு வாழ்வளித் தென்றும்
பழிதீர்க்குஞ் சிக்கற் பரமா—குழியான
கன்மக் குருடருடன் காலமெலாஞ் செல்லாமல்
என்மனத்திற் றீர்ப்பாய் இருள் (97)

இருள்தீர்த்து நீங்கா விருவினைகள் தீர்த்து
மருள்தீர்த்து மெய்ப்பதத்தில் மன்ன—அருள்சேர்த்து
நற்குருப ரற்களித்த நல்வாக்கு செந்திலவா
எற்களிப்பாய் சிக்கலுளா யின்று (98)

இன்றே எனக்கருளாய் எம்பெருமான் சிக்கலருட்
குன்றே மறைந்திருக்கக் கூடுமோ—நன்றேசெய்
வள்ளிமுதல் வானோர்கள் வாய்மொழிகேட் டென்மொழிநீ
எள்ளளவும் ஏற்றிலையே யெற்று (99)

எற்றைக்கும் உன்னருளால் எப்பிறப்பை யெய்திடினும்
பிற்றையுன் ருள்மறவாப் பேறருளிப்—பற்றறுத்துப்
பேராருஞ் சிக்கற் பெருமான் எனக்களிப்பாய்
சீராரும் முத்தித் திரு. (100)

### நூற்பயன்.

அந்தாதி வெண்பாவால் ஆள்சிக்கல் வேலவன்ருள்
நந்தாப் புகழெடுத்து நன்குரைத்தான்—சிந்தைதனில்
ஆய்ந்துபிர மானந்தன் அன்பால் இதையறிந்தோர்
தோய்ந்தின்ப வீடுறுவர் சொல்.

